# ॥ श्री ललितापञ्चरत्नम् ॥

## ஸ்ரீ லலிதா பஞ்சரத்னம்

(1)

प्रातः स्मरामि ललितावदनारविन्दं
बिम्बाधरं पृथुलमौक्तिकशोभिनासम् ।
आकर्णदीर्घनयनं मणिकुण्डलाढ्यं
मन्दस्मितं मृगमदोज्ज्वलफालदेशम् ॥

ப்ராத: ஸ்மராமி லலிதாவதநாரவிந்தம்
பிம்பாதரம் ப்ருதுலமௌக்திக சோபிநாஸம் ।
ஆகர்ணதீர்க்க நயனம் மணி குண்டலாட்யம்
மந்தஸ்மிதம் ம்ருகமதோஜ்வலபாலதேசம் ॥

காலைவேளையில் ஸ்ரீ லலிதாதேவியின் முகமாகிய தாமரையை ஸ்மரிக்கிறேன். அது கோவைப்பழ மொத்த உதடுகளுடையதாயும், பெரிய முத்துக்களான மூக்குத்தியுடையதாயும், காதுவரைப் பரந்து நீண்ட கண்களையுடையதாயும், மாணிக்க குண்டலங்களுடையதாயும், புன்முறுவல் உடையதாயும், கஸ்தூரி திலகத்தால் விளங்கும் நெற்றியுடையதாயுமுள்ளது.

(2)

प्रातर्भजामि ललिताभुजकल्पवल्लीं
रक्ताङ्गुलीयलसदङ्गुलिपल्लवाढ्याम् ।
माणिक्यहेमवलयाङ्गदशोभमानां
पुण्ड्रेक्षुचापकुसुमेषुसृणीर्दधानाम् ॥

ப்ராதர் பஜாமி லலிதா புஜகல்பவல்லீம்
ரக்தாங்குலீயலஸதங்குலி பல்லவாட்யாம் ।
மாணிக்யஹேம வலயாங்கதசோபமாநாம்
புண்ட்ரேக்ஷுசாப குஸுமேஷுஸ்ருணீர்ததாநாம் ॥

காலையில் ஸ்ரீ லலிதாம்பிகையின் கல்பகக் கொடி போன்றகைகளை சேவிக்கிறேன். அது சிவந்த மோதிரம் மிளிரும் துளிர் போன்ற விரல்களுடையதாயும், மாணிக்கம் பதித்த தங்க வளையல்களும், தோள்வளையும் கொண்டு விளங்குகின்றன. கரும்பு வில்லும், புஷ்ப பாணங்களும் ரம்பமும் அவற்றில் உள்ளன.

(3)

प्रातर्नमामि ललिताचरणारविन्दं
भक्तेष्टदाननिरतं भवसिन्धुपोतम् ।
पद्मासनादिसुरनायकपूजनीयं
पद्मांकुशध्वजसुदर्शनलाञ्छनाढ्यम् ॥

ப்ராதர் நமாமி லலிதாசரணாரவிந்தம்
பக்தேஷ்டதாந நிரதம் பவஸிந்துபோதம் ।
பத்மாஸநாதி ஸுரநாயக பூஜநீயம்
பத்மாங்குச த்வஜஸுதர்சனலாஞ்சநாட்யம் ॥

பக்தர்களின் இஷ்டத்தை எப்பொழுதும் நல்குவதும் சம்சாரக்கடலைக் கடப்பதற்காக அமைவதும், பிரம்மதேவ முதலிய தேவர்கள் வழிபடத் தக்கதும், தாமரை, அங்குசம், கொடி சுதர்சனம் முதலிய இலச்சினை கொண்டதுமான ஸ்ரீலலிதாம்பிகையி திருவடித் தாமரையை காலையில் வணங்குகிறேன்.

(4)

प्रातःस्तुवे परशिवां ललितां भवानीं
त्रय्यन्तवेद्यविभवां करुणानवद्याम् ।
विश्वस्य सृष्टिविलयस्थितिहेतुभूतां
विद्येश्वरीं निगमवाङ्मनसातिदूराम् ॥

ப்ராத: ஸ்துவே பரசிவாம் லலிதாம்பவாநீம்
த்ரய்யந்த வேத்ய விபவாம் கருணாநவத்யாம் ।
விச்வஸ்ய ஸ்ருஷ்டி விலயஸ்திதி ஹேது பூதாம்
வித்யேச்வரீம் நிகம வாங்கமநஸாதிதூராம் ॥

உபநிஷத்துக்களில் தெரிந்து தெளிய வேண்டிய மஹிமை கொண்டவளும், மாசற்ற கருணை பூண்டவளும், உலகத்தை படைக்கவும், காக்கவும், பிறகு லயமடையச் செய்யவு காரணமாய் இருப்பவளும், வித்யைகளுக்கு இருப்பிடமா வளும், வேதங்களுக்கும், வாக்குகளுக்கும், மனதிற்கு அப்பாற்பட்டவளுமான பரசிவையான ஸ்ரீ லலிதாம்பிகை காலையில் ஸ்தோத்ரம் செய்கிறேன்.

(5)

प्रातर्वदामि ललिते तव पुण्यनाम
कामेश्वरीति कमलेति महेश्वरीति ।
श्रीशाम्भवीति जगतां जननी परेति
वाग्देवतेति वचसा त्रिपुरेश्वरीति ॥

ப்ராதர் வதாமிலலிதே தவபுண்ய நாம
காமேச்வரீதி கமலேதி மஹேச்வரீதி ।
ஸ்ரீ சாம்பவீதி ஜகதாம் ஜநநீபரேதி
வாக்தேவதேதி வசஸா த்ரிபுரேச்வரீதி ॥

ஹே லலிதாம்பிகே! உனது புண்யமான பெயரை காலையில் சொல்கிறேன். காமேச்வரி என்றும், கமலா என்றும், மஹேச்வரி என்றும், ஸ்ரீ சாம்பவீ என்றும், உலகத்தின் உயரிய தாய் என்றும், வாக் தேவதை என்றும், த்ரிபுராம்பிகை என்றும் அல்லவா அந்த பெயர்கள் அமைந்தன!

(6)

यः श्लोकपञ्चकमिदं ललिताम्बिकायाः
सौभाग्यदं सुललितं पठति प्रभाते ।
तस्मै ददाति ललिता झटिति प्रसन्ना
विद्यां श्रियं विमलसौख्यमनन्तकीर्तिम् ॥

ய: ச்லோக பஞ்சகமிதம் லலிதாம்பிகாயா:
ஸௌபாக்யதம் ஸுலலிதம்படதிப்ரபாதே ।
தஸ்மை ததாதி லலிதா ஜடிதி ப்ரஸந்நா
வித்யாம் ஸ்ரீயம் விமலஸௌக்ய மனந்தகீர்திம் ॥

ஸ்ரீ லலிதாம்பிகையின் ஸ்தோத்ரமான இவ்வைந்து சுலோகங்களை - இவை வளமிக்க வாழ்வை கொடுப்பவை, மிக எளிதானவையும் கூட - காலையில் படிப்பவருக்கு உடன் மகிழ்ச்சியுடன் கல்வி, செல்வம், குறைவற்ற சௌக்யம், புகழ் ஆகியவற்றை அருள்கிறாள்.

ஸ்ரீ லலிதா பஞ்சரத்னம் முற்றிற்று

